[9th September 1958

THE HON. SRI M. A. MANICKAVELU : The staff at the Family Planning Centres have been instructed to give instructions relating to family planning and supply literature on it only to married persons.

SRI S. LAZAR : இப்பொழுது சர்க்கார் பிரசுரங்களை விற்கக் கூடிய அத்தனை கடைகளிலும் இப்புத்தகங்கள் கிடைக்கின்றன அல்லவா ? இவை களை சிறுவர்களுக்கும், கல்யாணம் ஆகாதவர்களுக்கும் விற்பதை தடுக்கும் முறையில் அல்லது அவர்களுக்கு இவைகள் கிடைக்காத முறையில் செய்வ தற்கு வேண்டிய நிலைமையை ஏற்படுத்த சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இவைகள் மற்றயிடங்களிலும் கிடைக்கலாம். ஆனால் அதற்கு வேண்டிய மிக அவசியமான சில விஷயங் களைச் சொல்லிக் கொடுப்பது "க்ளினிக்"கில்தான். அவைகள் பிரசுரங் களில் இல்லை.

SRI D. S. ATHIMOOLAM : இந்த குடும்பக் கட்டுப்பாடு விஷயமாக ஜில்லா தலைநகர ஆஸ்பத்திரிகளில் உள்ள வசதிகளைப் போல் தாலுகா தலைநகர ஆஸ்பத்திரிகளிலும் அம்மாதிரி சிகிச்சை செய்ய வேண்டிய வசதி யளிக்க சர்க்கார் முன்வருமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : கொஞ்சம் கொஞ்சமாக இதை விஸ்தரித்துக் கொண்டே போகிறோம். இப்பொழுது ஜில்லா தலைமை ஆஸ்பத்திரிகளில் இருக்கின்றன. தாலுகா தலைமை ஆஸ்பத்திரிகளுக்கு பிறகு வரலாம்.

SRI P. S. K. LAKSHMIPATHI RAJ : குடும்பக் கட்டுப்பாட்டை அமுலுக் குக் கொண்டுவர வேண்டுமென்று முயற்சிக்கிற இந்த சர்க்கார் சினிமாக் களில் காதல் கட்டங்களை அதிகமாக காட்டும் படங்களை அனுமதிப்பது என் என்று அமைச்சர் அவர்கள் அதற்கு ஒரு விளக்கம் தருவார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : காதல் வெறும் காதல் அளவிலேயே நின்று விட்டால் குடும்பக் கட்டுப்பாடே வேண்டியதில்லை.

SRI A. GOVINDASAMY : குடும்பக்கட்டுப்பாடு விஷயத்தில் இங்கு வீற்றிருக்கிற எட்டு அமைச்சர்களுக்கும் ஒருமித்த கருத்துண்டா ? அல்லது வேறுபாடான கருத்துக்கள் உள்ளவர்கள் இருக்கிறார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU: அவர்களின் மனது எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்தவரையில் வித்தியாசம் ஒன்றுமில்லை.

### *Higher Technological Institute*

* 124 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

கிண்டியில் ஆரம்பிக்கப்படப்போகும் உயர்தர கைத்தொழில் கலை நிலையம் (Higher Technological Institute) வேலை எப்போது ஆரம்பிக்கப்படும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : கிண்டியில் ஆரம்பிக்கப்படப் போகும் உயர்தர கைத்தொழில் கலை நிலையம் மத்திய அரசாங்கத்தால் ஏற் படுத்தப்பட இருக்கின்றது. 1959-ம் ஆண்டிலிருந்து இந்நிலையம் துவங்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

### *Most Backward Classes*

* 125 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the principles followed by the Government in preparing the list of Most Backward Classes;